2737. **லம்ப³** = தொங்குகின்ற,, நீண்ட, பெரிய, விஸ்தாரமான, உயர்ந்த.
2738. **லம்ப³னம்** = தொங்குதல், கரை, ஓரம், கழுத்து மாலை.
2739. **லய:** = அழிவு, தழுவுதல், ஒட்டிக்கொள்ளல், சேர்க்கை, மறைவு, உலகின் அழிவு, ஆழ்ந்த சிந்தனை, இசையில் தாளம், இருப்பிடம், இளைப்பாறுமிடம்.
2740. **லல்** = விளையாட, கிரீடை செய்ய, இங்கும் அங்கும் ஓட, விரும்ப, சீராட்ட.

---

## 138. லலனா to லக்ஷ்மண:

2741. **லல்** = விளையாட, கிரீடை செய்ய, இங்கும் அங்கும் ஓட, விரும்ப, சீராட்ட.
2742. **லலனா** = பெண், ஸ்த்ரீ, நாக்கு.
2743. **லலந்திகா** = நீண்ட மாலை, பல்லி, ஓணான்.
2744. **லலாடம்** = நெற்றி.
2745. **லலாமம்** = நெற்றிச் சுட்டி, நெற்றி ஆபரணம், அலங்காரம், உயர்ந்த வஸ்து, நெற்றிப் பொட்டு அல்லது குறி, வரிசை, கோடு, கொடி, வால், பிடரிமயிர், கௌரவம், அழகு, கொம்பு.
2746. **லலித** = விளையாட்டில் பிரியமுள்ள, காதல் கேளிக்கையில் பிரியம் உள்ள, அன்பான, அழகான, மனதைஈர்க்கும், ருசியான, மிருதுவான.
2747. **லலிதம்** = விளையாட்டு, கேளிக்கை, அழகான நடை, எளிமை, சுலபத்தன்மை, காதல் விளையாட்டு.
2748. **லலிதா** = பார்வதி, துர்க்கை, ஸ்த்ரீ, கஸ்தூரி.
2749. **லவ:** = பாகம், துண்டு, பகுதி, சிறு துளி, சொட்டு, கம்பளி, மயிர், நாசம், நஷ்டம், விளையாட்டு, ராமனின் ஒரு மகன் பெயர்.
2750. **லவங்க³:** = லவங்கச்செடி.
2751. **லவங்க³ம்** = கிராம்பு.
2752. **லவணம்** = உப்பு.
2753. **லவித்ரம்** = அரிவாள்.
2754. **லசு'ன: = லசு'னம்** = வெள்ளைப் பூண்டு.
2755. **லசி'த** = விளையாடிய , தோன்றிய.
2756. **லஹரி: = லஹரீ** = அலை, அலை வரிசை.
2757. **லக்ஷம் = லக்ஷ்யம்** = எண் 1,00,000, அடையாளம், குறி, குறிக்கோள், பாசாங்கு, ஏமாற்றல், பகட்டு.
2758. **லக்ஷணம்** = இலக்கணை, குறி, அடையாளம், குணம், பெயர், பதவி, உத்தேசம், குறிக்கோள், உருவம், அமைப்பு, தலை, தலைப்பு, உண்மையான வர்ணனை.
2759. **லக்ஷித** = பார்க்கப்பட்ட, எடுத்துக் காட்டப்பட்ட, குறிப்பால் அறிவிக்கப்பட்ட, உத்தேசிக்கப்பட்ட, ஆழ்ந்து சோதிக்கப்பட்ட.
2760. **லக்ஷ்மண:** = தசரதனின் மகன்.

---

## 139. லக்ஷ்மீ: to லிங்க3ம்

2761. **லக்ஷ்மீ:** = லக்ஷ்மீ தேவி, அதிருஷ்டம், செல்வம், செழிப்பு, அழகு, காந்தி, முத்து, மஞ்சள்.
2762. **லக்ஷ்மிகாந்த:** = விஷ்ணு, அரசன்.
2763. **லாக$^{4}$வம்** = லேசான தன்மை, அற்பமான தன்மை, மதிக்க முடியாதது, எண்ணம் இல்லாதது, அவமதிப்பு, வேகம், திறமை.
2764. **லாங்க$^{3}$லம்** = வால், ஆண்குறி.
2765.**லாங்கூ$^{3}$லம்** = கலப்பை, ஆண்குறி, பனை மரம்,.
2766. **லாஜா:** = பொரி.
2767. **லாஞ்ச$^{2}$னம்** = குறி, பெயர், களங்கம், புள்ளி.
2768. **லாப$^{4}$:** = லாபம், வருவாய், சுகபோகம், பெறுதல், அடைதல்.
2769. **லாப$^{4}$கர = லாப$^{4}$க்ருத்** = லாபம் தரும்.
2770. **லாலஸ** = கொஞ்சப்பட்ட, விரும்பப் பட்ட, ஆசைகொண்ட, லயித்துப்போன.
2771. **லக்ஷா** = சிவப்பு மெழுகு, அரக்கு.
2772. **லாலித்யம்** = அழகு, வசீகரிக்கும் தன்மை, அன்பு, காதலை வெளிப்படுத்துதல்.
2773. **லாவண்யம்** = அழகு, உப்புத் தன்மை.
2774. **லாஸ்யம்** = நடனம், இசையோடு கூடிய நடனம்.
2775. **லாஸ்ய:** = நடிகன், நடனமாடுபவன்.
2776. **லாஸ்யா** = நடனமாடுபவள்.
2777. **லிக்$^{2}$** = எழுத, கோடு போட, சித்திரம் எழுத, பிறாண்ட, துருவ, கிழிக்க.
2778. **லிகித** = எழுதப்பட்ட, கோடு போடப்பட்ட, துருவப்பட்ட, கீறப்பட்ட, கிழிக்கப்பட்ட.
2779. **லிகிதம்** = தஸ்தாவேஜு, புத்தகம், எழுதப்பட்டது.
2780. **லிங்க$^{3}$ம்** = அடையாளம், குறி, லக்ஷணம், சிவலிங்கம், ஆண்குறி, (ஆண்)பால், (பெண்)பால், வேதாந்தத்தில் சூக்ஷ்ம உடல்.

---

## 140. லிபி: to லோகயாத்ரா

2781. **லிபி: = லிபீ** = ஒரு மொழியின் எழுத்து வரிசை, எழுதும் கலை, கையெழுத்துப் பிரதி, தஸ்தாவேஜு .
2782. **லீ** = உருக்க, ஒன்றுசேர, கரைந்துபோக.
2783. **லீட$^{4}$** = நக்கப்பட்ட, ருசி பார்க்கப்பட்ட, உண்ணப்பட்ட.
2784. **லீன** = ஒன்று சேர்ந்த, ஒட்டிக் கொண்ட, மறைந்த, மறைக்கப்பட்ட, உருகிய, உருக்கப்பட்ட, கரைந்துபோன, இணைந்த, ஈடுபட்ட, இளைப்பாறும், லயித்துப்போன.
2785. **லீலா** = விளையாட்டு, கேளிக்கை, மகிழ்ச்சி, காதல் விளையாட்டு, அழகு, தோற்றம்.
2786. **லீலாகா$^{3}$ர: = லீலாகா$^{3}$ரம்= லீலாக்$^{3}$ருஹம்** = விளையாடும் இடம், மகிழ்ச்சிக் குரிய இடம்.

2787. **லுப்த** = உடைக்கப்பட்ட, உடைந்த, கொள்ளை அடிக்கப்பட்ட, அபஹரிக்கப்பட்ட, உபயோகமற்ற, மறைந்த.
2788. **லுப்த**[4] = காமவெறியன், பேராசைக்காரன், வேடன்.
2789. **லூதா** = சிலந்தி, எறும்பு.
2790. **லேக:** = எழுதும் முறை, எழுதியது, கடிதம், பத்திரம், தஸ்தாவேஜு, தேவன்.
2791. **லேக**[2]**க:** = எழுதுபவன், பிரதிஎடுப்பவன், ஓவியன்.
2792. **லேக**[2]**னம்** = எழுதுதல், பிரதி எடுத்தல், இளைத்துப் போதல், தொடுதல், பனை ஓலை.

2793. **லேக**[2]**நீ = லேகி**[2]**நீ** = பேனா, நாணல், தட்டையான எழுதுகோல், சிறு கரண்டி.
2794. **லேகா**[2] = எழுதும் முறை, எழுதுதல், கோடு, கீறல், வரிசை, பட்டை, ஓவியம், சித்திரம், இரண்டாம் பிறை.
2795. **லேப:** = பூசுதல், பூச்சு, களிம்பு, களங்கம், நிந்தனை, பாவம், உணவு.
2796. **லேச':** = சிறு பகுதி, மிகக் குறைவு, ஒரு சொல்லணி.
2997. **லேஹ்யம்** = நக்கி உண்ணும் உணவு அல்லது மருந்து.
2798. **லோக:** = பூவுலகம், ஜனங்கள், பிரஜைகள், கூட்டம்,பார்வை, தோற்றம்.
2799. **லோகநாத**[2]: = பிரம்மா, விஷ்ணு, சிவன், அரசன்.
2800. **லோகயாத்ரா** = உலகவாழ்க்கை.

---

## 141. லோகஸங்க்[3]ரஹ: to லோஹிதாக்ஷ:

2801. **லோகஸங்க்**[3]**ரஹ:** = ஜகத் முழுவதும், உலகின் நலன்.
2802. **லோகஸ்தி**[2]**தி:** = உலக இருப்பு, உலகநீதி.
2803. **லோகாசார:** = உலக வழக்கு.
2804. **லோகாந்தரம்** = பரலோகம், வேறு உலகம்.
2805. **லோகபவாத**[3]**:** = மக்கள் இகழும்.
2806. **லோகேச':** = அரசன், சக்கரவர்த்தி, பிரமன்.
2807. **லோகோக்தி:** = பழமொழி.
2808. **லோகோத்தர** = அசாதாரணமான, அபூர்வமான, மிக மேன்மையான.
2809. **லோசனம்** = கண், பார்வை, பார்த்தல்.
2810. **லோப:** = மறைவு, இன்மை, குறை, அபஹரித்தல், கொள்ளை அடித்தல், ஆக்கிரமித்தல், விட்டுவிடுதல், அழிவு.
2811. **லோப**[4]**:** = ஆசை, பேராசை, குழப்பம், விருப்பம், புத்தி மயக்கம்.
2812. **லோம:** = வால், உடலின் மீது உள்ள மயிர்.
2813. **லோமச':** = ஆடு, செம்மறியாடு, அடர்த்தியான மயிர் உடையவன்,
2814. **லோல** = ஆடுகின்ற, தொங்குகின்ற, அசைகின்ற, குழப்பமான, திடமற்ற, ஆசையுள்ள, அழிவு உள்ள.
2815. **லோலுப = லோலுப**[4] = ஊக்கம் உள்ள, பேராசை உள்ள.
2816. **லோஷ்ட: = லோஷ்டம்** = மண்ணாங்கட்டி.
2817. **லோஹ:** = உலோகம், தாதுப் பொருள், இரும்பு, எஃகு, தாமிரம், தங்கம், ரத்தம்.

2818. **லோஹித:** = சிவப்பு வர்ணம் உள்ள, செவ்வாய், பாம்பு, ஒரு வகை மான்.
2819. **லோஹிதம்** = குங்குமப் பூ, தாமிரம், ரத்தம், சண்டை, சிவப்புச் சந்தனம்.
2820. **லோஹிதாக்ஷ:** = குயில், பாம்பு, விஷ்ணு, சிவப்புப் பசை அல்லது பூச்சு.

---

## 142. லௌகிக to வட:

2821. **லௌகிக** = சாதாரணமான, இவ்வுலக சம்பந்தமான.
2822. **லௌகிகம்** = உலக வழக்கு.
2823. **லௌகிகா:** = சாதாரண உலக மக்கள்.
2824. **வ** = போல, அது போல.
2825. **வ:** = வருணன், தோள், கையின் மேற்பகுதி, காற்று, சமாதானம் செய்து கொள்ளுதல், சுபம், கடல், துணி, புலி, வீடு, ராஹூ.
2826. **வம்ச':** = மூங்கில், குடும்பம், இனம், பரம்பரை, புல்லாங்குழல், தடி, முதுகெலும்பு, கூட்டம், சேர்க்கை, ஒரு அளவு = பத்து முழம்.
2827. **வம்சீ'** = குழல், புல்லாங்குழல், குழாய், ரத்தக்குழாய், தமனி.
2829. **வக்தவ்ய** = சொல்லத்தகுந்த, பேசத்தகுந்த, நிந்திக்கத்தக்க, மட்டரகமான.
2830. **வக்த்ரு** = பேச்சாளன்,பேசுகின்றவன், பேசுவதில் வல்லவன், கற்றறிந்தவன்.
2831. **வக்த்ரம்** = வாய், முகம், அலகு, ஆரம்பம், அம்பின் நுனி.
2832. **வக்ர** = கோணலான, வளைந்த, நேர்மையற்ற, சுருட்டையான, கொடிய, இரட்டைப் பொருளுள்ள, கோள்களின் பிற்போக்கான சலனம்.
2833. **வக்ரதுண்ட[3]:** = விநாயகர், கிளி.
2834. **வசனம்** = சொல்லுதல், வாக்கியம், படித்தல், உருப்போடுதல், உத்திரவு, வேதத்தின் அல்லது சாஸ்திரத்தின் வாக்கியம்.
2835. **வசஸ்** = வசனம்,பேச்சு, வாக்கியம், கட்டளை, ஒழுங்குமுறை, சட்டம், புத்திமதி.
2836. **வஜ்ர:** = வஜ்ரம் = வஜ்ராயுதம், இடி, வைரம், கஞ்சி.
2837. **வஜ்ரீன்** = வஜ்ரப்4ருத் = இந்திரன்.
2838. **வஞ்சக:** = ஏமாற்றுபவன், போக்கிரி, நரி, கீரி.
2839. **வஞ்சித** = மோசம் செய்யப்பட்ட, அபகரிக்கப்பட்ட.
2840. **வட:** = ஆலமரம், சிப்பி, சோழி, பந்து, கயிறு.

---

## 143. வட: to வந்த்[3]

2841. **வட:** = ஆலமரம், சிப்பி, சோழி, பந்து, கயிறு.
2842. **வடீ** = கயிறு, மாத்திரை, உருண்டை.
2843. **வடு: = வடுக:** = சிறுவன், பிரம்மச்சாரி.
2844. **வணிஜ் = வணிஜ: = வாணிஜ:** = வியாபாரி.
2845. **வத்ஸ:** = கன்று, சிறுவன், சந்ததி, மகன், ஆண்டு.
2846. **வத்ஸர:** = ஆண்டு, வருடம்.
2847. **வத்ஸல** = பிரியம் உள்ள, அன்புள்ள.

2848. **வத்ஸா** = பெண் கன்று.
2849. **வத்**$^{3}$ = சொல்ல, பேச, கோஷிக்க, பிரகடனம் செய்ய, வர்ணிக்க, கூப்பிட, பாட.
2850. **வதனம்** = வாய், முகம், தோற்றம்
2851. **வத**$^{3}$**ந்ய = வதா**$^{3}$**ன்ய** = அதிகம் பேசும், நன்றகப் பேசவல்ல.
2852. **வத**$^{4}$**:** = கொலை, அழித்தல், அடித்தல், மறைத்தல், கணிதத்தில் கூட்டல்.
2853. **வது**$^{4}$**:** = யௌவன ஸ்த்ரீ, மகனின் மனைவி.
2854. **வதூ**$^{4}$**:** = மணப் பெண், மனைவி, மகனின் மனைவி, ஸ்த்ரீ.
2855. **வனம்** = காடு, தண்ணீர், கொத்து, புதர், இருப்பிடம்.
2856. **வனாந்த:** = காட்டின் ஓரம்.
2857. **வனசர:** = காட்டில் வாழம் மனிதன் அல்லது விலங்கு.
2858. **வனஸ்பதி:** = மரம், காட்டு மரம்.
2859. **வனிதா** = பெண், ஸ்த்ரீ, மனைவி.
2860. **வந்த்**$^{3}$ = வணங்க, ஆராதிக்க, பூஜிக்க, துதிக்க, நமஸ்காரம் செய்ய.

---

## 144. வந்த$^{3}$னம் to வரீயஸ்

2861. **வந்த**$^{3}$**னம்** = வணங்குதல், துதித்தல்.
2862. **வந்த்**$^{3}$**ய = வந்த**$^{3}$**னீய** = வணங்கத் தக்க, பூஜிக்கத் தக்க.
2863. **வன்ய** = காட்டினுடைய, காட்டிலுண்டான.
2864. **வப்** = விதைக்க, விதைகளைத் தெளிக்க, நாற்று நட, மொட்டை / சவரம் செய்ய, நெசவு செய்ய.
2865. **வபனம்** = விதை விதைத்தல், மயிர் வெட்டுதல், சவரம் செய்தல், வீரியம், விதை.
2866. **வபா** = கொழுப்பு, துளை, குடலின் கீழுள்ள மெல்லிய தோல், எறும்புப்புற்று.
2867. **வபுஸ்** = உடல், உருவம், தோற்றம், சாரம், இயற்கை, சுபாவம், காந்தி, அழகு.
2868. **வப்ர = வப்ரம்** = கோட்டின் மதில் சுவர், மலைச் சரிவு, பாரை, பீடபூமி, அஸ்திவாரம், வயல், அகழி, உருண்டையான பொருளின் சுற்றளவு.
2869. **வம: = வமனம்** = கக்குதல், துப்புதல், வாந்தி எடுத்தல்.
2870. **வயஸ்** = வயது, யௌவனம், பறவை.
2871. **வயஸ்ய:** = நண்பன், தோழன்.
2872. **வர:** = மேன்மையான, சிறந்த.
2873. **வர** = பொறுக்கி எடுத்தல், வரம் கொடுத்தல், கொடை, வெகுமதி, யாசித்தல், விருப்பம், மணமகன், மாப்பிள்ளை, வேலி, வேண்டுகோள்.
2874. **வரணம்** = வேண்டுதல், யாசித்தல், மூடுதல், மறைத்தல், காத்தல், பொறுக்கி எடுத்தல்.
2875. **வரண:** = இந்திரனின் ஒரு பெயர், மதில் சுவர், பாலம், மாவிலிங்க மரம், ஒட்டகம்.
2876. **வரம்** = அதிக நல்லதான / மேலானதான / சிறந்ததான.
2877. **வராஹ:** = பன்றி, மேகம், மலை, விஷ்ணுவின் ஓர் அவதாரம்.

2879. **வரிஷ்ட** = சாலச் சிறந்ததான, மிக முக்கியமான, மிகவும் பளுவான, மிகவும் அகலமான.
2880. **வரீயஸ்** = ஒன்றைக் காட்டிலும் மேம்பட்ட, அதிக மேன்மையான/ நல்லதான/ பெரியதான/ அகலமானதான.

---

## 145. வருண: to வலி:

2881. **வருண:** = வருண தேவன், மேற்கு திக்பாலகன், சமுத்திரம்.
2882. **வரேண்ய** = ஆசைப் படத் தக்க, விரும்பத் தக்க, மேலான.
2883. **வர்க[3]:** = வகுப்பு, வகை, வர்க்கம், அத்யாயம்,புத்தகத்தின் பாகம்.
2884. **வர்சஸ்** = பலம், சக்தி, காந்தி, பிரகாசம், உருவம், அமைப்பு, வீரியம்.
2885. **வர்ஜ:** = தள்ளிவிடுதல், நீக்கிவிடுதல், விட்டுவிடுதல்.
2886. **வர்ஜனம்** = தியாகம், துறத்தல், அடித்தல், விட்டுவிடுதல், கொலை செய்தல்.
2887. **வர்ஜம்** = நீக்கி, விலக்கி, விட்டு விட்டு, தவிர.
2888. **வர்ஜித** = நீக்கப்பட்ட, விலக்கப்பட்ட, இல்லாத.
2889. **வர்ண:** = நிறம், வர்ணம், இனம், ஜாதி, அழகு, வகை, எழுத்து, புகழ், உருவம், குணம்.
2890. **வர்ணனம்** = வர்ணித்தல், புகழ்தல், வர்ணம் தீட்டுதல், எழுதுதல்.
2891. **வர்த்தமான** = தற்சமயத்திய, இருக்கின்ற, வாழ்கின்ற.
2892. **வர்த்தி: = வர்த்தீ** = விளக்குத் திரி, கண் மை, களிம்பு, பூச்சு, சுருட்டப்பட்ட பொருள்.
2893. **வர்துல** = உருண்டையான, வட்ட வடிவான.
2894. **வர்த்மன்** = சாலை, பாதை, வழி, முறை, ஓரம், கண் இமை.
2895. **வர்த[4]:** = பெருக்குதல் , அதிகமாக்குதல், உயர்த்துதல், வெட்டுதல், பிரித்தல், வகுத்தல்.
2896. **வர்த[4]க: = வர்தி[4]க: = வர்த[4]கின்** = தச்சன்.
2897. **வர்ஷ: = வர்ஷம்** = மழை, பொழிவு, தெளித்தல், ஆண்டு, மேகம், தேசம்.
2898. **வலக்[3]ன:** = வலக்3னம் = இடுப்பு.
2899. **வலய:** = வளையல், வலயம், வட்டம், பரிதி.
2900. **வலி: = வலீ** = மடிப்பு, சுருள், சுருக்கம், கூரையின் ஓரப்பகுதி,

---

## 146. வல்கல: to வஹதீ

2901. **வல்கல: = வல்கலம்** = மரவுரி, மரப்பட்டை .
2902. **வால்மீக: = வால்மீகம்** = எறும்புப் புற்று, கரையான் புற்று.
2903. **வல்லப[4]:** = கணவன், காதலன், அதிகாரி, மேற்பார்வை இடுபவன்.
2904. **வல்லரி: = வல்லரீ = வல்லி: = வல்லீ** = கொடி, படரும் தாவரம்.
2905. **வச’** = உட்பட்ட, கட்டுப்பட்ட, கீழ்ப்படிந்த, வசப்பட்ட, அங்கீகரிக்கப்பட்ட.

2906. **வச': = வச'ம்** = விருப்பம், ஆசை, சக்தி, திறன், அதிகாரம், தன்வசம், பிறர் வசம்.
2907. **வசா'** = ஸ்த்ரீ, மனைவி, கணவனின் சஹோதரி, பசு, பெண் யானை, மலடி.
2908. **வச்'ய** = கட்டுப்பட்ட, உட்பட்ட, வசம் ஆக்கிக் கொள்ளத் தக்க.
2909. **வஸ்** = இருக்க, வசிக்க, குடி இருக்க, தங்க, கழிக்க, செலவிட.
2910. **வஸதி: = வஸதீ** = வீடு, இருப்பிடம், இருத்தல், வசித்தல், இரவு, ஓய்வெடுக்கும்நேரம்.
2911. **வஸனம்** = இருப்பிடம், இருத்தல், வசித்தல், ஆடை, துணி, ஆடை அணிதல்.
2912. **வஸந்த:** = இளவேனில், மன்மதனின் தோழன், ஒரு ராகத்தின் பெயர்.
2913. **வஸா** = உடலில் உள்ள கொழுப்பு .
2914. **வஸு** = செல்வம் , ரத்னம், தண்ணீர், பொருள், தங்கம்.
2915. **வஸு:** = அஷ்ட வசுக்களில் ஒருவர், எண் எட்டு, சூரியன், ஒளிக்கதிர், அக்னி, நீர் நிலை.
2916. **வஸுதா[4] = வசுமதி = வஸுந்த[4]ரா** = பூமி.
2917. **வஸ்து** = பொருள், உண்மை, விஷயம், செல்வம்.
2918. **வஸ்த்ரம்** = வேஷ்டி, இடையில் அணிந்த உடை.
2919. **வஹ்** = சுமக்க, தாங்க, முன் செல்ல, தள்ள, கொண்டுவர, முட்டுக் கொடுக்க, நிறுத்த, அனுபவிக்க.
2920. **வஹதீ = வஹா** = நதி.

---

## 147. வஹ்னி: to வாத[3]:

2921. **வஹ்னி:** = நெருப்பு, அக்னி, ஜீரண சக்தி, பசி எடுத்தல் .
2922. **வக்ஷஸ்** = மார்பு.
2923. **வா** = அல்லது, இல்லாவிட்டாலும், மேலும்.
2924. **வாக்யம்** = பேச்சு, மொழி, வாக்கியம்.
2925. **வாங்மய** = சொற்கள் நிறைந்த, நன்கு பேசும்.
2926. **வாச்** = சப்தம், பேச்சு , சொல், சரஸ்வதி.
2927. **வாசக:** = படிக்கின்றவன், பேசுகின்றவன்.
2928. **வாசஸ்பதி:** = ப்ருஹஸ்பதி.
2929. **வாசிக** = வாய் மொழியாக, சொற்களால் கூறப்படும்.
2930. **வாச்ய** = சொல்லத்தக்க.
2931. **வாஜின்** = குதிரை, அம்பு.
2932. **வாஞ்சா** = விருப்பம், ஆசை.
2933. **வாடீ** = இடம், வீடு, இருப்பிடம், தோட்டம், சாலை.
2934. **வாணிஜ்யம்** = வியாபாரம்.
2935. **வாணீ** = சொல், குரல், பேச்சு , மொழி சரஸ்வதி.
2936. **வாத: = வாயு:** = காற்று, வாயு தேவன், வாத நோய், உடலில் உள்ள காற்று.
2937. **வாதாத்மஜ:** = ஹனுமான்.
2938. **வாதாயனம்** = ஜன்னல்.

2939. **வாத்ஸல்யம்** = நேசம், பிரியம்.
2940. **வாத$^3$:** = சர்ச்சை, விவாதம், பேச்சு, வாதிடுதல், அலசுதல், விவரித்தல், முடிவு.

---

### 148. வாதி$^3$ன் to வாலி:

2941. **வாதி$^3$ன்** = வாதாடுபவன்,பேசுகிறவன், எதிர்க்கட்சிக்காரன், வாதி.
2942. **வாத்யம்** = இசைக்கருவி.
2943. **வாந்தி:** = வாந்தி எடுத்தல்.
2944. **வாப:** = விதை விதைத்தல்.
2945. **வாபனம்** = தலை மயிர் வெட்டிக் கொள்ளுதல், சவரம் செய்து கொள்ளல்.
2946. **வாபி:** = **வாபீ** = கிணறு.
2947. **வாம** = இடது, எதிரான, அழகான.
2948. **வாமன:** = குள்ளன்.
2949. **வாயஸ**: = காக்கை, அகில், தூபம் போடும் பொருள்.
2950. **வார:** = மூடி, போர்வை, கூட்டம், குவியல், பரிமாணம், அளவு, கிழமை, காலம், போது, தடவை, வாயில், சிவன்.
2951. **வாரண:** = யானை, போர்க்கவசம்.
2952. **வாராணஸீ** = காசி.
2953. **வாரி** = தண்ணீர்.
2954. **வாரிஜம்** = தாமரைப்பூ.
2955. **வாரிஜ:** = சங்கு.
2956. **வாரிதி4: = வாரிநிதி4: = வாரிராசி':** = கடல்.
2957. **வாருணீ** = மேற்கு, கள், மதுபானம்.
2958. **வார்தா** = செய்தி, சமாசாரம். தொழில், பிழைப்பு, ரகசியச் செய்தி.
2959. **வார்த்$^3$த$^4$கம் = வார்த்$^3$த$^4$க்யம்** = கிழத் தன்மை.
2960. **வாலி:** = குரங்குகளின் அரசன்.

---

### 149. வால்மீக: to விக்ருதி

2961. **வால்மீக: = வால்மீகி:** = ராமாயணத்தை இயற்றிய முனிவர்.
2962. வாஸ: = வாசனை, ஆடை, வீடு, இருப்பிடம், இடம்.
2963. **வாஸவ**: = இந்திரன்.
2964. **வாஸனா** = நினைவினால் ஏற்படும் அறிவு, முன்னால் ஏற்பட்ட மனப் பதிவுகளால் எஞ்சி நிற்கும் அறிவு.
2965. **வாஸரம் = வாஸர:** = கிழமை.
2966. **வாஸஸ்** = ஆடை, வஸ்திரம்.
2967. **வாஸுகி:** = பாம்புகளின் அரசன்.
2968. **வாஸ்தவ = வாஸ்தவிக** = உண்மையான, உள்ளது போன்ற.
2969. **வாஸ்து** = வீடு, பூமி, மனை, திடல், இடம், வசிக்கும் இடம்.

2970. **வாஹ:** = சுமத்தல், சுமப்பவன், குதிரை, எருது, வண்டி, காற்று.
2971. **வாஹக:** = சுமப்பவன், கூலியாள், வண்டி ஓட்டுபவன், தேர்ப்பாகன்.
2972. **வாஹனம்** = சுமத்தல், வண்டி, வாகனம், ஏறிச் செல்லும் விலங்கு.
2973. **வாஹிநீ** = போர்ப்படை, படையின் பகுதி.
2974. **விம்ச'தி** = இருபது.
2975. **விகர்ஷண : = விகர்ஷ:** = அம்பு, இழுத்தல், கோடு கிழித்தல்.
2976. **விகல** = குறைவான, குழப்பம் அடைந்த, நடுங்கிய, பயந்த, சோர்வடைந்த.
2977. **விகல்பம்** = சந்தேஹம், ஐயம், உபாயம், யுக்தி, வேறுபாடு, குறை, குற்றம், வகை, அறியாமை.
2978. **விகார:** = உருவத்தில் மாற்றம், இயற்கை நிலையில் மாற்றம், நோய், பரபரப்பு, உணர்ச்சி.
2979. **விகாஸ: = விகாஸனம்** = மலருதல், புஷ்பிதல், விரிவடைதல்.
2980. **விக்ருதி = விக்ரியா** = மனதின் இயற்கை நிலை / உருவம்/ முறை இவற்றின் மாறுதல், நோய், உணர்ச்சி, கோபம்.

---

## 150. விகீர்ண: to விட$^{3}$ம்பனம்

2981. **விகீர்ண:** = பரப்பப்பட்ட, சிதறடிக்கப்பட்ட, நன்கு அறியப்பட்ட, புகழ் அடைந்த.
2982. **விக்ரம:** = சூரத்தனம், பராக்கிரமம்,திறமை, விஷ்ணு, காலடி, அடிச் சுவடு.
2983. **விக்ரிய:** = விற்றல், விற்பனை.
2984. **விக்யாத** = புகழ் பெற்ற, ஒத்துக்கொள்ளப்பட்ட.
2985. **விக$^{3}$த** = சென்ற, மறைந்த, பிரிக்கப்பட்ட, காலியான, இல்லாதுபோன.
2986. **விக$^{3}$லித** = கீழே விழுந்த, நழிவி விழுந்த, உருகிய, கரைந்த, வடிந்த, சென்ற, மறைந்த, தளர்ந்த, அவிழ்ந்துபோன.
2987. **விக்$^{3}$ரஹ:** = உருவம், உடல், பிரிதல், பரவுதல், விஸ்தரித்தல், கழகம், சண்டை.
2988. **விக$^{4}$டித** = பிரிக்கப்பட்ட, உடைக்கப்பட்ட, தனித்தனியாக்கப்பட்ட.
2989. **விக்ன$^{4}$:** = தடை, கஷ்டம் , கடினம்.
2990. **விக்னேச':= விக்னேச்'வர:** = கணேசர்.
2991. **விசக்ஷண** = கற்றறிந்த, திறமையுள்ள.
2992. **விசார: = விசாரணம்** = சிந்தித்தல், ஆலோசித்தல், அலசிப்பார்த்தல், ஆராய்ந்து பார்த்தல், சந்தோஷம், விசாரித்தல்.
2993. **விசித்ர** = பலவர்ணமுள்ள, பலவிதமான, அழகான, ஆச்சரியம் அளிக்கும்.
2994. **விச்சி$^{2}$தி** = வெட்டுதல், உடைத்தல், மறைவு, குறை, நிறுத்தம், நிறுத்துதல், எல்லை, பிரித்தல்.
2995. **விஜய:** = வெற்றி, அர்ஜுன், ஜெயித்தல்.
2996. **விஜித** = ஜெயிக்கப்பட்ட, தோற்கடிக்கப்பட்ட.
2997. **விஜ்ரும்ப$^{4}$ணம்** = கொட்டாவி விடுதல்,மொட்டுக் கட்டுதல், மலருதல், காட்டுதல், தோன்றுதல், திறத்தல்.
2998. **விஞ்ஞாப்தி:** = விஞ்ஞாபனா = விஞ்ஞாபனம் = வேண்டுகோள்.
2999. **விஞ்ஞானம்** = அறிவு, அறிந்து கொள்ளும் சக்தி, திறமை, புத்திசாலித்தனம்.

3000. **விட$^{3}$ம்பனம்** = நடிப்பு, வஞ்சனை, துன்புறுத்துதல், பரிஹசித்தல்.

---

## 151. விதந்து: to விது$^{4}$ர:

3001. **விதந்து:** = விதவை.
3002. **விதரணம்** = கொடை, தியாகம், அக்கரை சேருதல், தாண்டிச் செல்லுதல்.
3003. **வித்தம்** = செல்வம், தனம்.
3004. **வித்$^{3}$** = சொல்ல, அனுபவிக்க, கற்பிக்க, விவரிக்க, காண்பிக்க, வெளிப்படுத்த, நன்கு தெரியும்படிச் செய்ய.
3005. **வித$^{3}$க்$^{3}$த$^{4}$** = சாம்பலாக்கப்பட்ட, எரிக்கப்பட்ட, சமைக்கப்பட்ட, சேதம் அடைந்த, கெட்டிக்கார, திறமை வாய்ந்த.
3006. **விதி$^{3}$த** = புகழ்பெற்ற, அறியப்பட்ட, குறிப்பாகத் தெரிவிக்கப்பட்ட.
3007. **விதூ$^{3}$ஷக:** = பரிகாசம் செய்பவன், சிரிக்கச்செய்பவன், கதாநாயகனின் முக்கிய தோழன், கோமாளி, விதூஷகன்.
3008. **விதே$^{3}$ச':** = வெளிநாடு.
3009. **வித்$^{3}$யா** = கல்வி, அறிவு, படிப்பு.
3010. **வித்யா$^{3}$ர்தி$^{2}$ன்** = மாணவன்.
3011. **வித்$^{3}$யலாய:** = பள்ளிக்கூடம், கல்விக்கூடம்.
3012. **வித்$^{3}$யுத்** = மின்னல், இடி, மேகங்களின் கர்ஜனை.
3013. **வித்$^{3}$ரும:** = பவளச் செடி, பவளம்.
3014. **வித்வான்** = அறிவாளி, கற்றறிந்தவன்.
3015. **வித$^{4}$: = விதா$^{4}$** = மாதிரி, வகை, அமைப்பு, ரகம், செழுமை, மடிப்பு, யானையின் தீனி.
3016. **விதா$^{4}$த்ரு** = செய்பவன், அமைப்பவன், படைப்பவன், பிரமன், தலைவிதி.
3017. **விதி$^{4}$:** = செயல், சடங்கு, நடத்தை, முறை, ஒழுங்கு, சட்டம், கட்டளை, பிரமன், அதிர்ஷ்டம், விதி, காலம்.
3018. **விதி$^{4}$த: = விதி$^{4}$வத் = விதி$^{4}$பூர்வகம்** = முறையான, முறைப்படி, நியமப்படி, குறிக்கப்பட்ட.
3019. **விது$^{4}$:** = சந்திரன், விஷ்ணு, கற்பூரம்.
3020. **விது$^{4}$ர:** = மனைவியை இழந்தவர்.

---

## 152. வினய to விபினம்

3021. **வினய** = வினயம், அடக்க ஒடுக்கம், ஒழுக்கம், சிரத்தை, நன்னடத்தை.
3022. **வினா** = இல்லாமல், தவிர.
3023. **வினாடி$^{3}$:** = நாழிகையின்( 1 / 60) பாகம் = 24 நொடிகள்.
3024. **விநாயக:** = விநாயகர், கருடன், தடை, இடையூறு, தடைகளையும் இடையூறுகளையும் நீக்குபவன்.
3025. **விநாச'** = கேடு, நஷ்டம், அழிவு, நாசம், மரணம்.

3026. **விநிபாத:** = வீழ்ச்சி, துன்பம், அவமானம், கேடு.
3027. **விநியோக3:** = பங்கிடுதல், தனித்தனியாக்குதல், உபயோகித்தல், நியமித்தல், விலக்குதல்,
3028. **விநீத** = விலக்கப்பட்ட, கற்பிக்கப்பட்ட, நன்னடத்தையுள்ள, அன்புள்ள, அழகிய, மனதை ஈர்க்கும்.
3029. **விநேய:** = மாணவன், சீடன்.
3030. **விநோத3:** = விளையாட்டு, சந்தோஷம், மகிழ்ச்சி, பிரியம், ஆசை, ஊக்கம், உற்சாகம்.
3031. **விந்யாஸ:** = ஒழுங்கு படுத்துதல், இட்டு வைத்தல்.
3032. **விபஞ்சிகா = விபஞ்சி** = வீணை, விளையாட்டு.
3033. **விபண:** = விற்பனை, வியாபாரம்.
3034. **விபணி: = விபணீ** = மண்டி, கடை, சந்தை, வியாபாரம்.
3035. **விபணின்** = வியாபாரி, கடைக்காரன்.
3036. **விபத்தி: = விபதா3 = விபத்3** = துன்பம், கஷ்டம், வேதனை, நஷ்டம், அழிவு.
3037. **விபரீத** = விபரீதமான, மாறான, பொய்யான, எதிர்மறையான.
3038. **விபர்யய:** = எதிரிடை, பகைமை, மாற்றம், இல்லாமை, கேடு, துன்பம், மறைவு, அழிவு, பிரளயம், தவறு.
3039. **விபாக:** = சமையல், ஜீரணித்தல், பழுத்த தன்மை, பயன், துக்கம், வேதனை, கஷ்டம்.
3040. **விபினம்** = காடு.

---

## 153. விபுல to வியுக்த

3041. **விபுல** = பெரிய, அதிகமான, விஸ்தாரமான, நிரம்ப.
3042. **விப்ர:** = அந்தணன், அறிவாளி.
3043. **விப்ரயோக3:** = ஒற்றுமையின்மை, பிரிவு, கலகம்.
3044. **விபல:** = பழம் இல்லாத, பயன் இல்லாத, லாபம் இல்லாத, வீணான.
3045. **விபூ3த4:** = கற்றறிந்தவன், தேவதை, முனிவன், சந்திரன்.
3046. **விப4க்த** = பிரிக்கப்பட, தனித் தனியான, பலவிதமான.
3047. **விப4க்தி:** = பங்கிடுதல், பிரிதல், தனியாக்குதல், பங்கு, பிரிவு, பெயர்சொற்களின் வேற்றுமை.
3048. **விப4வ:** = பராக்கிரமம், செல்வம், சக்தி, வல்லமை, பதவி, மஹத்வம், பெருமை, மோக்ஷம், பேரின்பம்.
3049. **விபா4க3:** = பாகம், பகுதி, பிரிவு, முன்னோர் சொத்தில் பங்கு, பாகம் பிரித்தல், பங்கு போடுதல்.
3050. **விபு4:** = காலம், இடம், பிரபு, ஆத்மா, ஆளுபவன், அரசன், ஆகாயம், சிவன், விஷ்ணு, பிரமன்.
3051. **விபூ4தி:** = பராக்கிரமம், செல்வச் செழிப்பு, உயர்வு, கௌரவம், செல்வம், சொத்து, அதிசய சக்தி, சாம்பல், திருநீறு.
3052. **விபூ4ஷணம்** = விபூ4ஷா = ஆபரணம், அணிகலன், அலங்காரம்.

3053. **விப்⁴ரம:** = அலைதல், சுற்றுதல், தவறு, குறை, குழப்பம், மோஹம், அழகு, ஐயம், சந்தேஹம்.
3054. **விமர்ச': = விமர்ச'னம்** = பரீட்சித்தல், ஆலோசித்தல், விவாதித்தல், விரிவுரை.
3055. **விமான: = விமானம் = அவமானம்** = அவமதிப்பு, வாஹனம், ஆகாயவிமானம், ஏழு மாடியுள்ள அரண்மனை / மாளிகை.
3056. **விமுக்த** = விடப்பட, சுதந்திரமான.
3057. **விமுக²** = திருப்பிய முகத்துடன், வெறுப்புடன், விரோதமான, எதிரான.
3058. **விமோசனம் = விமோக்ஷணம்** = விடுதலை, விடுவித்தல்.
3059. **வியத்** = விண்வெளி, ஆகாயம்.
3060. **வியுக்த** = பிரிந்த, விலகிய, விடப்பட்ட, இல்லாத.

---

## 154. வியோக³: to விலக்ஷண

3061. **வியோக³:** = பிரிவு, இன்மை, நஷ்டம்.
3062. **விரசித** = எழுதப்பட்ட, இயற்றப்பட்ட, இழைக்கப்பட்ட, ஒழுங்கு படுத்தப்பட்ட, சரி செய்யப்பட்ட.
3063. **விரக்தி:** = பற்றற்ற நிலை, அதிருப்தி.
3064. **விரதி:** = ஓய்வு, ஒழிவு, முடிவு, நிறுத்தம், பற்றின்மை.
3065. **விரம:** = நிறுத்தம், சூரியன் அஸ்தமித்தல்.
3066. **விரல** = மெல்லிய, மிருதுவான, நெருக்கமில்லாத, அபூர்வமான, அதிசயமான, சிறிதான, கொஞ்சமான.
3067. **விராக³:** = நிறத்தின் மாறுபாடு, திருப்தியின்மை, பற்றின்மை, வெறுப்பு.
3068. **விராம:** = முடிவு, தடங்கல், நிறுத்துதல், நிறுத்தம், வாக்கியத்தின் முடிவைக் குறிக்கும் முற்றுப்புள்ளி அல்லது கோடு.
3069. **விராஜ்** = அழகு, காந்தி, பிரகாசம், உடல், பிரமனின் முதல் படைப்பு.
3070. **விரிஞ்சி**: = பிரமன், விஷ்ணு, சிவன்.
3071. **விருத³: = விருத³ம்** = பட்டம், விருது, உரக்கக் கத்துதல், பிரகடனம்.
3072. **விருத்³த⁴** = தடுக்கப்பட்ட தலைகீழான, விரோதமான, எதிரிடையான.
3073. **விரூப** = இயற்கையிலில்லாத, கெட்ட, அழகற்ற.
3074. **விரூபாக்ஷ:** = சிவன்.
3075. **விரோத⁴:** = பகைமை, கலகம், இடையூறு, ஒவ்வாமை, தடை.
3076. **விரோதி⁴ன்** = எதிரி.
3077. **விளம்ப³: = விளம்ப³னம்** = தொங்குதல், தாமதம் .
3078. **விலஸத்** = விளையாட்டில் பிரியமுள்ள, பளபளக்கும், பிரகாசிக்கும்.
3079. **விலஸனம்** = விளையாடுதல், பளபளத்தல், பிரகாசித்தல்
3080. **விலக்ஷண** = அசாதரணமான, கெட்ட லக்ஷணங்கள் உடைய.

---

## 155. விலாஸ: to விசி'ஷ்ட

3081. **விலாஸ:** = விளையாட்டு, ஆனந்தம், அழகு, பளபளப்பு.
3082. **விலேப: = விலேபனம்** = பூச்சு, மெழுகு, தைலம்.
3083. **விலோசனம்** = கண்.
3084. **விவாத³:** = தர்க்கம், விவாதம், வழக்கு, கட்டளை.
3085. **விவாஸ: = விவாஸனம்** = வெளியேற்றுதல், நாடு கடத்துதல்.
3086. **விவரணம்** = விரிவுரை, வெளிப்படுத்துதல், விவரித்தல்.
3087. **விவர்த:** = சுற்றுதல், சுழலுதல், உருமாறுதல், திரும்புதல்.
3088. **விவஸ்வத்** = சூரியன், அருணன், ஒரு மனுவின் பெயர், தெய்வம், எருக்கு இலை / செடி.
3089. **விவாஹா:** = திருமணம்.
3090. **விவிகத** = பிரிக்கப்பட்ட, தனித் தனியாக்கப்பட்ட, வேறான, புனிதமான, குற்றமற்ற, சுத்தமான.
3091. **விவித⁴** = பலவிதமான.
3092. **விவேக:** = பகுத்தறிவு, ஆராய்ந்து தீர்மானிக்கும் சக்தி.
3093. **விவேசனம்** = ஆராய்தல், பகுத்தறிதல், நிர்ணயித்தல்.
3094. **விச்'** = நுழைய, அடைய, சேர, உட்கார.
3095. **விச'த³** = சுத்தமான, தூய்மையான, தெளிவான, வெண்மையான, ஒளியுடன் கூடிய.
3096. **விசா'க²:** = முருகன், சிவன்.
3097. **விசா'கா²** = ஒரு நட்சத்திரத்தின் பெயர்.
3098. **விசா'ரத³** = புகழ் வாய்ந்த, கற்றறிந்த, கெட்டிக்கார, திறமை வாய்ந்த.
3099. **விசா'ல:** = பரந்த, பெரிய, புகழ் வாய்ந்த, அகலமான, விசாலமான.
3100. **விசி'ஷ்ட** = மேலான, அசாதாரணமான, லக்ஷணங்களுடன் கூடிய.

---

## 156. விசு'த்³த4 to விஸ்தர:

3101. **விசு'த்³த⁴** = சுத்தமான, தூய்மையான, களங்கமற்ற, பாபமற்ற.
3102. **விசே'ஷ:** = வித்தியாசம், தனிப்பட்ட குணம், அவயவம், விதம் ,வகை மென்மை, நெற்றியில் இடும் பொட்டு.
3103. **விச்'வம்** = எல்லா உலகமும், சுக்கு, விஷ்ணு.
3104. **விச்வேச':** = விச்'வேச்'வர: = பரம்பொருள், சிவன்.
3105. **விச்'வதஸ்** = எல்லா இடத்திலும், எங்கும், எப்பக்கத்திலும்.
3106. **விச்'வம்ப⁴ர:** = பரம்பொருள், விஷ்ணு, சிவன்.
3107. **விச்வாஸ:** = நம்பிக்கை, ரஹசியம்.
3108. **விஷம்** = விஷம், தண்ணீர்.
3109. **விஷம** = சமமில்லாத, கடினமான, கஷ்டமான, துக்கம் தரும், பயங்கரமான, பருமனான, கெட்ட, எதிரிடையான, அயோக்கியத்தனமான.

3110. **விஷய:** = புலன்களுக்கு உரிய விஷயம், பொருள், வஸ்து, நிலம், ராஜ்ஜியம், நாடு, சிற்றின்பம்
3111. **விஷாத**[3]**:** = சோகம், துக்கம், சோர்வு, உத்சாஹமின்மை, ஆசையின்மை.
3112. **விஷூசிகா = விஸூசிகா** = காலரா, வந்தி.
3113. **விஷ்கம்ப**[4]**:** = தடை, தாழ்ப்பாள், தூண், கம்பம், மரம், பரப்பு, விஸ்தாரம், வட்டம்.
3114. **விஷ்டா** = மலம், வயிறு.
3115. **விஸர்க**[3]**:** = தள்ளல், விடுதல், எறிதல், போடுதல், காணிக்கை, தானம் செய்தல், விட்டு விடுதல், மலம் கழித்தல், " : " என்னும் குறி.
3116. **விஸர்ஜனம்** = அனுப்புதல், கொடுத்தல், மலம் கழித்தல், விடுதல், வெளியேற்றல், ஆவாஹனம் செய்த தேவதையைத் திருப்பி அனுப்புதல்.
3117. **விஸர்ப:** = பரவுதல், நகருதல், தோலில் தோன்றும் படை நோய்.
3118. **விஸ்ருத** = பரவிய, சொல்லப்பட்ட, விஸ்தரிக்கப்பட, உச்சரிக்கப்பட்ட.
3119. **விஸ்ருஷ்ட** = உண்டான, வெளியாகிய, அனுப்பப்பட்ட, விடுபட்ட, தள்ளப்பட்ட, கொடுக்கப்பட்ட, எறியப்பட்ட, வெளியேற்றப்பட்ட.
3120. **விஸ்தர:** = பரவுதல், விவரணம், விஸ்தாரம், விரிவு, கூட்டம், அதிகம், படுக்கை, ஆசனம்.

---

## 157. விஸ்தார: to வீர:

3121. **விஸ்தார:** = பரவுதல், அகலம், பரந்த அமைப்பு, புதிய இலைகள் உள்ள கிளை, வட்டத்தின் விட்டம், விவரித்தல்.
3122. **விஸ்தீர்ண: = விஸ்த்ருத** = பரப்பப்பட்ட, அகலமான, விசாலமான, பெரிய.
3123. **விஸ்போ**[2]**ட:** = கட்டி, பரு, அம்மைநோய்.
3124. **விஸ்மய:** = ஆச்சரியம், கர்வம்.
3125. **விஸ்மித** = ஆச்சரியமடைந்த, கர்வம் அடைந்த.
3126. **விஸ்மரணம்** = விஸ்ம்ருதி: = மறத்தல், மறதி.
3127. **விஹக**[3]**: = விஹங்க**[3]**:** = பறவை, மேகம், அம்பு, சூரியன், சந்திரன்.
3128. **விஹங்கம:** = பறவை.
3129. **விஹாயஸ்** = ஆகாயம், விண்வெளி.
3130. **விஹார:** = அப்புறப்படுத்துதல், வெளியேற்றுதல், விளையாட்டு, கேளிக்கை, சிதறுதல், தோட்டம், பூங்கா, கோவில், ஆச்ரமம், பௌத்த மடம்.
3131. **விஹித** = தீர்மானிக்கப்பட்ட, நிர்மாணிக்கப்பட்ட, தயாரிக்கப்பட்ட, பிரிக்கப்பட்ட, செய்யப்பட்ட, ஒழுங்கு படுத்தப்பட்ட.
3132. **விஹீன** = இல்லாத, இல்லாமல், இழிவான.
3133. **விஹ்வல** = பயந்த, நடுக்கமுற்ற, துக்கமடைந்த, கலக்கமடைந்த, அமைதியற்ற, இளகிய, நெகிழ்ந்த.
3134. **விக்ஷேப:** = எறிதல், அனுப்புதல், குழப்பம், பயம்.
3135. **வீக்ஷணம் = வீக்ஷணா** = பார்த்தல், பார்வை.
3136. **வீக்ஷணம்** = கண், கோள்களின் பார்வை.

3137. **வீசி: = வீசீ** = அலை, மகிழ்ச்சி, ஓய்வு, ஒளிக்கிரணம், கடல்.
3138. **வீணா** = வீணை, மின்னல்.
3139. **வீதி$^2$: = வீதீ** = சாலை, தெரு, வரிசை, கடை, கடைவீதி, சந்தை.
3140. **வீர:** = போர் வீரன், வீரன், மகன், கணவன், வேள்வித்தீ.

---

## 158. வீர்யம் to வேதனம்

3141. **வீர்யம்** = பராக்கிரமம், வலிமை, ஆண்மை, சக்தி, திறன், திடத் தன்மை.
3142. **வ்ருத்தம்** = செய்தி, சமாசாரம், விஷயம், ஒழுக்கம், முறை, உருண்டை, வட்டம், விருத்தம், நிகழ்ச்சி, சரிதம்.
3143. **வ்ருத்தி:** = இருப்பு, வாழ்தல், இருத்தல், போக்கு, முறை, நிலை, நடத்தை, நிலைமை, தொழில், விரிவுரை, சுற்றளவு.
3144. **வ்ருதா$^2$** = இலாபமற்று, பொருளற்று, அவசியமிலாத, வீணான.
3145. **வ்ருத்$^3$த$^4$** = வயது முதிர்ந்த, வளர்ச்சியடைந்த.
3146. **வ்ருத்$^3$த$^4$:** = கிழவன், முனிவர்.
3147. **வ்ருத்$^3$தா$^4$** = கிழவி.
3148. **வ்ருத்$^3$தி$^4$:** = வளர்ச்சி, மலருதல், செழுமை, சொத்து, குவியல், குவிப்பு, இலாபம், வட்டி.
3149. **வ்ருச்சிக:** = தேள், விருச்சிக ராசி.
3150. **வ்ருஷ்ண:** = அண்டம்.
3151. **வ்ருஷ: = வ்ருஷப$^4$:** = எருது, காளை, விருஷப ராசி, ஒரு வர்க்கத்தில் மேலானது, சிவபிரானுடைய வாஹனம், நந்தி.
3152. **வ்ருஷத்$^4$வஜ : = வ்ருஷபதி: = வ்ருஷப$^4$த்$^4$வஜ:** = சிவனுடைய பெயர்கள்.
3153. **வ்ருஷலீ** = கன்னிப்பெண், மாதவிடாயில் உள்ளவள், சூத்திரனுடைய மனைவி.
3154. **வ்ருஷாகபி:** = விஷ்ணு, சிவன், சூரியன், அக்னி தேவன், இந்திரன்.
3155. **வ்ருஷ்டி:** = மழை.
3156. **வ்ருஷ்ணி:** = கிருஷ்ணனின் முன்னோர்களில் ஒருவர், கிருஷ்ணன், மேகம், செம்மறியாடு, ஒளிக்கிரணம், இந்திரன், அக்னி, காற்று.
3157. **வேக$^3$:** = வேகம், மனவேகம், நடை, பிரவாஹம், வெள்ளம், ஓட்டம், வலிமை, சக்தி, காதல், அன்பு, வீரியம்.
3158. **வேணி: = வேணீ** = தலைப் பின்னல், ஓட்டம், நீரோட்டம்.
3159. **வேணு: =** புல்லாங்குழல், மூங்கில், நாணல்.
3160. **வேதனம்** = சம்பளம், கூலி, வாடகை, பிழைப்பு, தொழில்.

---

## 159. வேதஸ: to வைதி$^3$க

3161. **வேதஸ:** = நாணல், பிரம்பு, கொடி, எலுமிச்சம் பழம்.
3162. **வேதாள:** = பூதம், பிசாசு, வேதாளம்.
3163. **வேத்ரு:** = அறிந்தவன், முனிவர்.

3164. **வேத்ர: = வேத்ரம்** = பிரம்பு, தடி.
3165. **வேத**[3]: = அறிவு, நான்கு வேதங்களில் ஒன்று.
3166. **வேதி**[3]: = **வேதீ**[3] = யாக மேடை, முத்திரை மோதிரம், சரஸ்வதி, நிலப்பகுதி.
3167. **வேத்**[3]**ய** = அறியத் தக்க, மணம் புரியத் தக்க.
3168. **வேத**[3]**ஸ்** = பிரமன், விஷ்ணு, சிவன், அறிவாளி, சூர்யன்.
3169. **வேபனம்** = நடுக்கம்.
3170. **வேலா:** = காலம், வேலை, பருவம், அலை, வெள்ளம், எல்லை, அளவு, கடற்கரை
3171. **வேச': = வேஷ:** = உடை, வே ஷம், நுழைவு, நுழைதல், நுழை வாயில், வேசியின் வீடு.
3172. **வேச்'யா** = விலை மாது.
3173. **வேஷித** = சுற்றப்பட்ட, மூடப்பட்ட, சூழப்பட்ட, தடுத்து நிறுத்தப்பட்ட.
3174. **வைகுண்ட**[2]**:** = துளசிச் செடி, விஷ்ணு.
3175. **வைகுண்ட**[2]**ம்** = விஷ்ணு லோகம்.
3176. **வைகரீ** = பேச்சு, பேசுதல், பேச்சுத்திறன், தெளிவான உச்சரிப்பு.
3177. **வைகு**[3]**ண்யம்** = குற்றம், மாறுபாடு, குணமற்ற தன்மை, எதிரிடை.
3178. **வைசித்ர்யம்** = ஆச்சரியம், எதிர்பாராமல், பலவிதமானது.
3179. **வைஜயந்தி** = விஷ்ணுவின் மாலை, விருதுக்கொடி, முத்திரை, அடையாளம், மாலை, ஒரு அகராதி.
3180. **வைதி**[3]**க** = புனிதமான, வேத சம்பந்தமுள்ள.

---

## 160. வைது[3]ஷ்யம் to வ்யஞ்ஜனம்

3181. **வைது**[3]**ஷ்யம்** = அறிவு, படிப்பு.
3182. **வைதே**[3]**ஹீ** = சீதை.
3183. **வைத்ய:** = வைத்தியன், அறிவாளி.
3184. **வைனதேய** = கருடன், அருணன்.
3185. **வைப**[4]**வம்** = பராக்கிரமம், வல்லமை, புகழ், மகிமை, செல்வம்.
3186. **வைமாத்ர: = வைமாத்ரக: = வைமாத்ரேய:** = மாற்றாந்தாயின் மகன்.
3187. **வைமாத்ரா = வைமாத்ரீ = வைமாத்ரேயீ** = மாற்றாந்தாயின் மகள்.
3188. **வைரம்** = விரோதம், வெறுப்பு, சூரத்தன்மை, பராக்கிரமம்.
3189. **வைராக்**[3]**யம்** = பற்றின்மை, துக்கம், சோகம், திருப்தியின்மை.
3190. **வைரின்** = எதிரி, வீரன்.
3191. **வைரூப்யம்** = அவலக்ஷணம், அழகற்ற தன்மை.
3192. **வைவஸ்த:** = ஒரு மனுவின் பெயர், யமன், சனி.
3193. **வைசா'க**[2]**:** = வைசாக மாதம், மத்து.
3194. **வைசேஷ்யம்** = சிறப்பு, விசே ஷத் தன்மை.
3195. **வைச்'ய**: = வைஸ்யன்.
3196. **வைச்'ரவண:** = குபேரன்.
3197. **வைச்'வாநர:** = அக்னி தேவன், ஜீரணம் செய்யும் அக்னி.

3198. **வ்யஜ:** = வ்யஜனம் = விசிறி.
3199. **வ்யக்தி:** = உருவம், தனிப்பட்டதன்மை, விளக்கமாகத் தெரிதல், தனி மனிதன்.
3200. **வ்யஞ்ஜனம்** = தெளிவாக்குதல், மாறுவேடம், விவரித்தல், சின்னம், மிகுதி, தொடு சுவை, மெய்யெழுத்து, தாடி.

---

### 161. வ்யதிகர: to வ்யாபன்ன

3201. **வ்யதிகர:** = சேர்க்கை, சேருதல், கூடுதல், கலவை, கலப்பு, நிகழ்ச்சி, தருணம், வாய்ப்பு, சங்கடம், கஷ்டம், ஒன்றுக்கு ஒன்று கொண்டுள்ள தொடர்பு.
3202. **வ்யதிக்ரம:** = மிஞ்சுதல், தவறுதல், அதிக்ரமித்தல், மாறுபாடு, தலை கீழானது, பாவம், துயரம், துரதிர்ஷ்டம்.
3203. **வ்யதிரிக்த** = பிரிக்கப்பட்ட, தனியான, மேலான, இல்லாத.
3204. **வ்யதிரேக:** = பிரிவு , வித்தியாசம், தவிர்த்தல், மேன்மை.
3205. **வ்யதா²** = பீடை, துன்பம், கவலை, பயம், நோய், அமைதியின்மை.
3206. **வ்யய:** = நாசம், அழிவு, இடையூறு, மறைவு, செலவு, வீழ்ச்சி, உபயோகித்தல்.
3207. **வ்யவஸாய:** = தீர்மானித்தல், முயற்சி, தொழில், வேலை, செய்கை, நடத்தை, யுக்தி, உபாயம்.
3208. **வ்யவஸ்தா² = வ்யவஸ்தி²: = வ்யவஸ்தா²னம்** = நிலை, ஒழுங்கு, நிச்சயமான தன்மை, நன்கு அமைக்கப்பட்ட, திடத்தன்மை.
3209. **வ்யவஸ்தி²த** = ஒழுங்கு செய்யப்பட, ஸ்தாபிக்கப்பட்ட, உறுதியான.
3210. **வ்யவஹார:** = ஒழுக்கம், நடத்தை, தொழில், வேலை, வியாபாரம், வழக்கு, ஒழுங்கு, வழக்கம்.
3211. **வ்யஸனம்** = கேடு, நஷ்டம், அழிவு, வீழ்ச்சி, குற்றம், குறை, துக்கம், கெடுதி, அபாயம், காற்று, தண்டனை, பிரித்தல்.
3212. **வ்யாகரணம்** = சமஸ்கிருத இலக்கணம்.
3213. **வ்யாக்²யானம் = வ்யாக்²யா** = விவரித்தல், வர்ணனை, விரிவுரை, உரை.
3214. **வ்யாக்4ர:** = புலி, சிறந்தவன்.
3215. **வ்யாக்⁴ரீ** = பெண் புலி.
3216. **வ்யாஜ:** = கபடம் சூது, யுக்தி, உபாயம், பொய்க்காரணம், சாக்குப் போக்கு.
3217. **வ்யாத⁴:** = வேடன்.
3218. **வ்யாதி⁴:** = நோய்.
3219. **வ்யாபக** = பரவும், பரவலாக உள்ள.
3220. **வ்யாபன்ன** = பயனற்ற, சேதமடைந்த, துன்பமடைந்த, இறந்த.

---

### 162. வ்யாபார: to வ்ராத்ய:

3221. **வ்யாபார:** = தொழில், வேலை, முயற்சி, காரியம், வியாபாரம், செயல்.
3222. **வ்யாபாரீன்** = வியாபாரி.
3223. **வ்யாப்தி:** = பரவுதல், நிறைவு, அடைதல், எங்கும் உள்ள தன்மை.

3224. **வ்யாமிச்’ர** = கலந்த, கலந்துள்ள.
3225. **வ்யாமோஹ:** = மயக்கம், கலக்கம், குழப்பம்.
3226. **வ்யாயாம:** = உடற்பயிற்சி, நீட்டுதல், முயற்சி, செயல், களைப்பு.
3227. **வ்யால:** = பாம்பு, புலி, சிறுத்தை, துஷ்ட யானை, கெட்ட மனிதன், அரசன், விஷ்ணு.
3228. **வ்யாஸ:** = பிரித்தல், பங்கு போடுதல், பரவுதல், வியாச முனிவர், அகலம், விட்டம், ஒழுங்கு படுத்துபவன், சேர்த்தி இயற்றுபவன்.
3229. **வ்யாஹ்ருதி** = சொல், பேச்சு, உச்சரித்தல், மந்திரங்களின் முற்சேர்க்கைச் சொற்கள்.
3230. **வ்யாக்ஷேப:** = தடை, தாமதம், மனக் கலக்கம்.
3231. **வ்யுத்பத்தி** = உற்பத்தி, ஆரம்பம், மூலம், முழு அறிவு.
3232. **வ்யுத்பன்ன** = உண்டான, உண்டாக்கப்பட்ட, பூர்த்தியான, முழுமை அடைந்த, நன்கு கற்றறிந்த.
3233. **வ்யூதி:** = நெய்தல், நெசவு, தைத்தல்.
3234. **வ்யூஹ:** = போர்ப்படை, அணிவகுப்பு, பகுதி, பிரிவு, கூட்டம், அமைப்பு, உடல், பகுத்தறிதல், தர்க்கம்.
3235. **வ்யோமன்** = ஆகாயம், விண்வெளி, அப்ரகம், தண்ணீர், சூரியனின் கோவில்.
3236. **வ்யோமசாரின்** = தேவன், பறவை, மஹான், நட்சத்திரம், கோள்.
3237. **வ்ரஜ:** = பசு மாட்டுத் தொழுவம், இருப்பிடம், இடைச்சேரி, கூட்டம், சமுதாயம், வழி, மேகம், பாதை.
3238. **வ்ரண:** = வ்ரணம் = காயம், புண், கட்டி.
3239. **வ்ரத: = வ்ரதம்** = நோன்பு, மதக்ரியை, பிரதிக்ஞை, செயல், காரியம், பயிற்சி.
3240. **வ்ராத்ய:** = வீழ்ச்சியுற்றவன், மட்டமான மனிதன்.

---

## 163. வ்ரீட3: to ச’ண்ட3:

3241. **வ்ரீட3: = வ்ரீடா3** = வெட்கம்.
3242. **வ்ரீஹி:** = நெல், அரிசி.
3243. **ச’கட: = சகடம்** = வண்டி.
3244. **ச’குன:** = பறவை.
3245. **ச’குனம்** = நல்ல / கெட்ட சகுனம்.
3246. **ச’குனி:** = பறவை, கழுகு, ராஜாளி, சகுனி மாமா.
3247. **ச’குந்த:** = நீலாங்கப் பக்ஷி.
3248. **ச’க்த** = கெட்டிக்கார, சக்தி வாய்ந்த, சாமர்த்தியம் உள்ள.
3249. **ச’க்தி:** = வலிமை, பராக்கிரமம், தகுதி, திறமை, திறன்.ஈட்டி, வேலாயுதம்.
3250. **ச’க்ய** = செய்யத் தக்க, சுலபமான.
3251. **ச’க்ர:** = இந்திரன், ஆந்தை, கேட்டை நக்ஷத்திரம், மருத மரம்.
3252. **ச’க்வர:** = எருது.
3253. **ச’ங்கர:** = மங்களம் தருபவன், சிவன், சங்கராச்சாரியார்.
3254. **ச’ங்கரீ** = பார்வதி.

3255. **ச'ங்கா** = சந்தேகம், பயம், ஐயம், ஆசை, நம்பிக்கை, நிச்சயம் அற்ற தன்மை.
3256. **ச'ங்கித** = சந்தேகமான, நிச்சயம் அற்ற, நம்பக் கூடாத, நடுக்கம் அடைந்த, பயத்துடன் கூடிய.
3257. **ச'ங்க: = ச'ங்கம்** = சங்கு, நெற்றியில் புருவ மத்தி எலும்பு, ஒரு வாசனைப் பொருள்.
3258. **ச'சி = ச'சீ** = இந்திராணி.
3259. **ச'ட[2]:** = ஏமாற்றுபவன், முட்டாள், சோம்பேறி, நடுநிலையாளன்.
3260. **ச'ண்ட[3]: = சண்ட[4]:** = அலி, எருது, காளை.

---

## 164. ச'தம் to ச'ர:

3261. **ச'தம்** = நூறு.
3262. **ச'தகம்** = நூற்றின் சேர்க்கை, நூறு ஆண்டுகள்.
3263. **ச'தக்ரது** = இந்திரன்.
3264. **ச'தபிஷஜ் = சதபிஷா** = சதய நக்ஷத்திரம்.
3265. **ச'த்ரு:** = பகைவன்.
3266. **ச'த்வரீ** = இரவு.
3267. **ச'னி: = ச'னைச்வர:** = சனீஸ்வரன்.
3268. **ச'ப: = சபத:** = சாபம் இடுதல், சபதம் செய்தல்.
3269. **ச'கர:** = சிறு மீன்.
3270. **ச'ப்த:** = சப்தம், சொல், குரல், பெயர், பெயர்ச்சொல்.
3271. **ச'ப்[3]தகோச':** = அகராதி.
3272. **ச'ம்** = மங்களகரமான, இன்பம்.
3273. **ச'ம:** = அமைதி, விடுபடல், கை, ஓய்வு.
3274. **ச'மனம்** = அமைதிப்படுத்துதல், முடிவு, அழிதல், அடித்தல், விழுங்குதல்.
3275. **ச'ம்பா** = மின்னல்.
3276. **ச'ம்பு[4]:** = சிவன், பிரமன், முனிவர்.
3277. **ச'ம்ஸா** = புகழ்தல், ஸ்துதி, விருப்பம், ஆசை, வர்ணித்தல், சொல்லுதல்.
3278. **ச'யனம்** = படுக்கை, தூங்குதல், படுத்தல்.
3279. **ச'ய்யா** = படுக்கை, தூக்கம், கட்டுதல், கோர்த்தல்.
3280. **ச'ர:** = அம்பு, நாணல், எண் ஐந்து.

---

## 165. ச'ரணம் to சா'தகும்ப[4]ம்

3281. **ச'ரணம்** = புகலிடம், உதவி, வீடு, இருப்பிடம்.
3282. **ச'ரண்ய** = உதவி செய்ய, உதவத்தக்க, காக்கத் தகுந்த.
3283. **ச'ரத்[3] = ச'ரதா[3]** = இலையுதிர் காலம்.
3284. **ச'ரப[4]:** = யானைக் குட்டி, பெரிய சரப பக்ஷி, ஒட்டகம், வெட்டுக்கிளி.
3285. **ச'ரீரம்** = உடல்.

3286. **ச’ர்கரா** = சர்க்கரை, கூழாங்கல், துண்டு.
3287. **ச’ர்வ:** = சிவன்.
3288. **ச’ர்வரீ** = இரவு, ஸ்திரீ, மஞ்சள்.
3289. **ச’லாகா** = சிறுதடி, முளை, அம்பு, விரலின் அடியெலும்பு, தளிர், துண்டு.
3290. **ச’ல்யம்** = ஈட்டி, சூலம், அம்பு, முள்.
3291. **ச’ச’:** = முயல்.
3292. **ச’சி’ன்** = சந்திரன் , கற்பூரம் .
3293. **ச’ச்’வத்** = அடிக்கடி, எப்போதும்.
3294. **ச’ஸ்த** = புகழப்பட்ட, மகிழ்ச்சி தரும், சுபமான, மேலானதான.
3295. **ச’ஸ்த்ரம்** = ஆயுதம், கருவி, இரும்பு, எஃகு, தோத்திரம், புகழுதல்.
3296. **ச’ஸ்யம்** = தான்யம், குணவிசே ஷம்.
3297. **சா’க:** = சா’கம் = காய்கறி, கிழங்கு.
3298. **சா’கா²** = மரக்கிளை, புயம், கை, பகுதி, பாகம்.
3299. **சா’ண:** = உரைகல், சாணைக்கல், ரம்பம்.
3300. **சா’தகும்ப⁴ம்** = தங்கம், பொன், ஊமத்தை.

---

## 166. சா’த்³வல: to சா’ச்’வத

3301. **சா’த்³வல: = சாத்³வலம்** = புல்வெளி.
3302. **சா’ந்த** = அமைதியான, சுபமான.
3303. **சா’ந்தம்** = போதும், இனி வேண்டாம்.
3304. **சா’ந்தி:** = அமைதி, பொறுமை, மௌனம், சப்தம் இன்மை,பசி அடங்குதல், பகை தீருதல்.
3305. **சா’ப:** = சாபம், சபதம், திட்டு, கெட்ட சொற்கள்.
3306. **சா’ம்ப⁴வீ** = பார்வதீ.
3307. **சா’ரங்க³:** = சாதகப்பக்ஷி, வண்டு, மான், மயில், யானை.
3308. **சா’ரத³ம்** = வெண் தாமரை, தானியம்.
3309. **சா’ரதா³** = ஒரு வகை வீணை, சாரதாம்பாள், சரஸ்வதி.
3310. **சா’ரிகா** = மைனாக்குருவி, சதுரங்க விளையாட்டு, சதுரங்கக்காய்.
3311. **சா’ர்ங்க³ = சா’ர்ங்க³ம்** = விஷ்ணுவின் வில்.
3312. **சா’ர்தூ³ல** = புலி, சிறுத்தை, அரக்கன், சரபம் என்னும் பக்ஷி.
3313. **சா’ல:** = ஒரு வகை உயர்ந்த, பருத்த மரம், மீன், வேலி.
3314. **சா’லா** = அறை, மண்டபம், வீடு, இருப்பிடம், முக்கிய கிளை.
3315. **சா’லாரம்** = ஏணி, பறவைக் கூடு.
3316. **சா’லி:** = அரிசி, சம்பா நெல், புனுகுப் பூனை.
3317. **சா’லீன்** = வினயமுள்ள, வெட்கமுள்ள, சமமான.
3318. **சா’ல்மலி: = சா’ல்மலீ** = பூலோகத்தின் ஏழு பெரும் பகுதிகளில் ஒன்று, இலவ மரம்.
3319. **சா’வக:** = விலங்கின் கன்று.
3320. **சா’ச்’வத = சா’ச்’வதிக = சா’ச்’வதம்** = எப்போதும் உள்ள, நிரந்தரமான.

### 167. சா’ஸக: to சி’லா

3321. **சா’ஸக:** = அரசன், ஆளுநர்.
3322. **சா’ஸனம்** = ராஜ்ஜியம், ஆட்சி, அரசாட்சி, சட்டம், ஒழுங்கு, கட்டளை, பட்டா, தஸ்தாவேஜு, தண்டித்தல்.
3323. **சா’ஸ்த்ரு** = ஆசிரியன், அரசன், ஆளுபவன், தகப்பன்.
3324. **சா’ஸ்த்ரம்** = கட்டளை, விதி, சாஸ்திரம், விஞ்ஞானம்.
3325. **சா’ஸ்த்ரின்** = அறிவாளி, கற்றறிந்தவன்.
3326. **சி’க$^{2}$ண்டி$^{3}$ன்** = மயில், மயில்தோகை, அம்பு, சேவல், ஒரு வகை மல்லிகை, த்ருபதராஜனின் மகன்.
3327. **சி’க$^{2}$ர: = சி’க$^{2}$ரம்** = உச்சி, சிகரம், கொண்டை, குடுமி, சிவப்பு நிற ரத்தினம்.
3328. **சி’க$^{2}$ரிணி** = அழகிய பெண், தொப்பிளுக்கு மேலே செல்லும் மயிர் வரிசை, சமஸ்கிருத செய்யுள் விருத்தங்களில் ஒன்று.
3329. **சி’கா$^{2}$** = தலை மயிர் கொத்து, குடுமி, கொண்டை, மயிலின் கொண்டை, சுவாலை, கிளை, ஒளிக் கிரணம்.
3330. **சி’கி$^{2}$ன்** = மயில், அம்பு, சேவல், மரம், அக்னி, விளக்கு, குதிரை, எருது, மலை, ஸாது, கேது கிரகம்.
3331. **சி’க்$^{3}$ரு:** = முருங்கை மரம், முருங்கைக்காய், கீரை, காய்கறி.
3332. **சி’தி** = வெண்மை, கருப்பான.
3333. **சி’திகண்ட$^{2}$:** = சிவன், மயில்.
3334. **சி’தி$^{2}$ல = சி’தி$^{2}$லித** = அவிழ்ந்த, தளர்ந்த, ஓய்ந்துபோன, முறிந்த, துண்டிக்கப் பட்ட, பலமற்ற, பலஹீனமான.
3335. **சி’பி$^{3}$கா** = **சி’விகா** = பல்லக்கு, ஊஞ்சல்.
3336. **சி’பி$^{3}$ரம்** = முகாம், கூடாரம், தங்கும் இடம்.
3337. **சி’ரம்** = தலை, திப்பிலியின் வேர், மலையுச்சி, சிகரம், கபாலம், கலசம், முன்பக்கம், தலைப்பக்கம், தலைமை, முக்கியத்துவம்.
3338. **சி’ரஸிஜ:** = தலை மயிர்.
3339. **சி’ரா** = நரம்பு, தமனி, ரத்தக் குழாய்.
3340. **சி’லா** = கல், பாறை, மனோசிலை, கற்பூரம், சிரை, ரத்தக்குழாய், நரம்பு, இயந்திரக் கல், தூணின் தலைப்பகுதி.

---

### 168. சி’ல்பம் to சீ’தலா

3341. **சி’ல்பம்** = கலை, சிற்பக்கலை, கலைத்திறன், மதச் சடங்கு, யாகத்தில் உபயோகப் படும் மரக்கரண்டி.
3342. **சி’ல்பின்** = சிற்பி, கலை வல்லுனன்.
3343. **சி’வ:** = சிவன், வேதம், மோக்ஷம், ஆண்குறி, தேவதை, பாதரசம், கட்டுமுளை, குங்கிலியம், கோள்களின் நல்ல சேர்க்கை.
3344. **சி’வம்** = சுபம், ஆனந்தம், செழுமை, நன்மை, தண்ணீர், உப்பு, மோக்ஷம், நெல்லிமரம்.

3345. **சி'வா** = பார்வதி தேவி.
3346. **சி'சி'ர:** = சி'சி'ரம் = பனி, பனிக்காலம், சிசிர ருது.
3347. **சி'சு':** = குழந்தை, மிருகங்களின் குட்டி,
3348. **சி'ச்'னம்** = ஆண்குறி.
3349. **சி'ஷ்ட** = மீதியான, பாக்கிவைக்கப்பட்ட, கட்டளையிடப்பட்ட, கற்பிக்கப்பட்ட, பழக்கப்பட்ட, கற்றறிந்த, மேலான, பூஜிக்கப்பட்ட, முக்கியமான, தர்ம புத்தி உடைய.
3350. **சி'ஷ்ட:** = முக்கியமானவன், மரியாதைக்கு உரியவன், புத்திசாலி மனிதன்.
3351. **சி'ஷ்ய:** = சீடன், படிப்பவன், பலவந்தம் செய்தல், கோபம்.
3352. **சி'க்ஷக:** = கற்பவன், கற்பிப்பவன்.
3353. **சி'க்ஷணம்** = கற்றல், கற்பித்தல்.
3354. **சி'க்ஷா** = படித்தல், கற்றல், கற்பித்தல், வேதங்களில் ஒன்று சிக்ஷை.
3355. **சீக்$^3$ர = சீக்$^3$ரிய** = விரைவான, வேகமான.
3356. **சீக்$^3$ரம்** = சுறுசுறுப்பான, வேகமான.
3357. **சீதா = சீதல** = குளிர்ச்சியான, குளிரும், குளிரால் உறைந்த.
3358. **சீதலம்** = குளிர், சந்தனம், முத்து, தாமரை, குளிர்காலம்.
3359. **சீதல: = சீதாம்சு** = சந்திரன், கர்ப்பூரம்.
3360. **சீதலா = சீதலீ** = அம்மை, வைசூரி.

---

## 169. சீர்ண to சு'ப்$^4$ர

3361. **சீர்ண** = குறைந்து போன, மெலிந்த, ஒடிந்த, காய்ந்த, அழுகின, வீணான.
3362. **சீர்ஷம்** = தலை, மண்டையோடு, இரும்புத் தொப்பி, தலைப்பாகை, குல்லாய், தீர்ப்பு, தலையங்கம்.
3363. **சீலம்** = இயற்கை, ஒழுங்கு, ஸ்வபாவம், நடத்தை, நற்குணம், அழகு, நல்ல உருவம் கொண்டிருப்பது.
3364. **சு'க:** = கிளி, சுக முனிவர்.
3365. **சு'க்தி**: = சிப்பி, முத்துச் சிப்பி, சங்கு, குதிரையின் பிடரி மயிர்.
3366. **சு'க்ர:** = சுக்ரன், சுக்ராச்சாரியார், நெருப்பு, அக்னி.
3367. **சு'க்ரம்** = வீர்யம்.
3368. **சு'க்ரவார**: = வெள்ளிக் கிழமை.
3369. **சு'க்ல** = வெண்மையான, சுத்தமான, பிரகாசமான.
3370. **சு'க்லம்** = வெள்ளி, புது வெண்ணை, கஞ்சி, வெளிச்சம்.
3371. **சு'சி** = சுத்தமான, நிர்மலமான, வெண்மையான, பிரகாசமான, புனிதமான, உண்மையான.
3372. **சு'சி:** = புனிதத் தன்மை, சுத்தம், உண்மையான நடத்தை, குற்றமற்றது, வெண்மை, நற்குணம், புனிதமானவன், சுத்தமானவன், கோடைக்காலம், சூரியன், சந்திரன், அக்னி, சுக்ரன் என்னும் கோள், எருக்கு, ஆகாயம், ஸ்ருங்கார ரசம்.
3373. **சுண்டி$^2$: = சுண்டீ2** = சுக்கு.
3374. **சு'ண்டா$^3$** = யானைத் துதிக்கை, மதுபானம், கள்ளுக்கடை, வேசி, கூட்டிவைப்பவள்.

3375. **சு'த்$^{3}$த$^{4}$** = சுத்தமான,தெளிவான, புனிதமான, குற்றமற்ற, களங்கமற்ற, வெண்மையான, ஒளியுடைய, நேர்மையான, ஒழுக்கமுள்ள, உண்மையான, சரியான, எளிமையான.
3376. **சு'த்$^{3}$தி$^{4}$** := சுத்தத் தன்மை, நிர்மலத்வம், புனிதம், பிராயச்சித்தம், பிரகாசம், சுத்தம் செய்தல்.
3377. **சு'னக: = சு'னி: =** ச்'வன் = நாய்.
3378. **சு'ப$^{4}$ = சோ'ப$^{4}$ன** = மங்களகரமான, பிரகாசமான, அழகான, நல்ல, நற்குணமுடைய, அதிர்ஷ்டத்துடன் கூடிய.
3379. **சு'ப$^{4}$ம்** = மங்களம், நல்ல அதிர்ஷ்டம், அணிகலன், தண்ணீர்.
3380. **சு'ப்$^{4}$ர** = வெண்மையான, பிரகாசிக்கும்.

---

## 170. சு'ல்க: to சே'ஷ:

3381. **சு'ல்க: = சு'ல்கம்** = சுங்கம், வரி, திருமண உபகாரப் பணம், கன்னிகைக்காகக் கொடுக்கப்படும் பணம்.
3382. **சு'ச்'ரூஷக**: = வேலையாள், பணிவிடை செய்பவன்.
3383. **சு'ச்'ரூஷணம்= சு'ச்'ருஷா** = பணிவிடை, கேட்க விருப்பம்.
3384. **சு'ஷ்க** = உலர்ந்து போன, காய்ந்து போன, வறண்ட, மலிந்த, உபயோகமற்ற.
3385. **சூ'கர:** = பன்றி.
3386. **சூ'ன்ய** = இல்லாத, காலியான, தனியான.
3387. **சூ'ன்யம்** = ஆகாயம், விண்வெளி, பூஜ்யம்.
3388. **சூ'ர:** = வீரன், போர் வீரன், சூரன், சிங்கம், பன்றி, சூரியன்.
3389. **சூ'ர்ப = சூர்பம்** = முறம்.
3390. **சூ'ர்பகர்ண:** = யானை, விநாயகர்.
3391. **சூ'ல: = சூ'லம்** = கூர்மையான ஆயுதம், திரிசூலம், வேல், வலி, வயிற்று வலி.
3392. **சூ'லின்** = சிவன், சூலம் ஏந்தியவன், முயல்.
3393. **ச்'ருகா$^{3}$ல:** = நரி, வஞ்சகன், கெட்டவன்.
3394. **ச்'ருங்க$^{3}$ம்** = கொம்பு, மலையுச்சி, சிகரம், உயர்வு, உயரம், பீச்சாங்குழல்.
3395. **ச்'ருங்கா$^{3}$ர:** = காதல், புணர்ச்சி, அடையாளம், ஒரு காவியச் சுவை.
3396. **ச்'ருங்கீ$^{3}$ன்** = மலை, யானை, சிவன், சிவனின் பணியாள் ஸ்ருங்கீ.
3397. **சே'கர:** = கொண்டை, கிரீடம், உச்சி, சிகரம், முக்கியமானது, மேலானது.
3398. **சே'வலம்** = சை'வல: = நீர்ப்பாசி.
3399. **சே'ஷ: = சேஷம்** = மீதியானது, பாக்கி, முக்தி.
3400. **சே'ஷ:** = ஆதிசே ஷன், பலராமன், முடிவு, சாவு.

---

## 171. சை'ல: to ச்'யாமா

3401. **சை'ல:** = மலை, பாறை, பெரிய கல்.
3402. **சை'லீ** = போக்கு, நடை, ஒழுக்கம், முறை, நடத்தை.

